யென்னவென்றால், ஒறையூர் நாச்சியார் கோவில் பூஜை செய்துவருகிற அர்ச்சகம் ராமசுவாமிபட்டன் யென்பவன் தினம் பிரதி ஸ்நானம், ஸந்தியாவந்தனம முதலானதுகள் செய்யாமல் அசுச்சையுடன் நாச்சியாரை தொட்டு பூஜை செய்து வருகிறதாகவும் பின்னும் அவன் செய்துவரப்பட்ட கெட்டநடத்தைகளைக்கண்டும் கிலவியாத்துடன் ஷை கோவிலில இருக்கப்பட்டவர்கள் தபால் மூலமாய் அனுப்பிவித்த கடுதாசியை இத்துடன் உம்மிடத்துக்கு அனுப்பிவித்திருக்கிறோம். அதில்கண்டபடி கெட்டநடத்தைசெய்யப்பட்ட ஷையான் நாச்சியாரைதொட்டு பூஜை முதலானதுகள் செய்துவருகிறது மொம்பவும் அயுக்தமானகாரியமாயிருக்கிறதனாலே இந்த உத்திரவுகண்டவுடன் அர்ச்சகாள் தரோபஸ்துபேர்களையும் வரவழைத்து இந்த கடுதாசியை படித்து காண்பிவித்து யாராருக்கு ஷை கோவில் காணியாகயிருக்கிறதோ அவர்கள் முறைப்படிக்கிப்போய் பூஜை செய்துவரும்படி கண்டிப்பாய் தாக்கீது செய்து ஷை ராமசுவாமிபட்டனை ஷை கோவில் பூஜை செய்ய ஒட்டாமல் நிருத்திப்போடும்படி ஷை கோவில் மணியகாரனுக்கு தாக்கீது செய்யவும்.

1851 ஹு அக்டோபர்மீ 12௳.

(ஒப்பம்) தெலுங்கு கையெழுத்து. (ஒப்பம்) தெலுங்கு கையெழுத்து.
(ஒப்பம்) ஸ்ரீபராசரபட்டர். மானேஜர்கள்.

---

## 6th January 1852—Trustees' order to Peshkar excusing Ramaswami Bhatter after 2 months.

நெ. 2.

ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் யேட் பேஷகார் கிருஷ்ணய்யருக்கு.

யென்னவென்றால், ஷை கோவில் அர்ச்சகன் ராமசுவாமிபட்டன் சங்கதியை குறித்து டிசம்பர்மீ 20௳ நீ யெழுதிய 242 நெ. அர்ஜி வந்தது.

அது காரியத்துக்கு ஷை ராமசுவாமிபட்டன் ஒறையூர் நாச்சியார்கோவிலில் அசுச்சியுடன் நாச்சியாரை தொட்டு பூஜைசெய்து வருவதாக தெரியவந்ததர்க்காக ரெண்டு மாசகாலமாய் பூஜை செய்ய வொட்டாமல் நிறுத்தியிருந்ததே அவனுக்கு போதுமான சிக்ஷையாயிருக்கிறதுனாலும் இது முதல்தடவையாயிருக்கிறதினாலும் மன்னித்திருக்கிறோம். இனிமேல் ஷையான் காலாகாலத்தில் சுசுச்சியுடன் பூஜைசெய்து வருமலிருக்கிறதாக தெரியவருமேயாகில் தப்பாமல் நிருத்திபோடப்படுமென்று ஷையானுக்கு கண்டிப்பாய் தாக்கீதுசெய்து இனி சரியாய் நடந்துவருகிறதாக அவனிடத்தில் முச்சிலிக்கையும் வாங்கிக்கொண்டு அவனுக்கு யெப்போது முறை வருகிறதோ அவன் முறைமட்டும் பூஜை செய்து வரும்படி உத்திரவு செய்து மைத்த அர்ச்சகாள் முறையை அவரவர்கள் தானே பார்த்துவரவேணுமென்று தரோபஸ்து அர்ச்சகாளுக்கும் அறிவித்து அந்தப்படி நடப்பிவித்து வரவும்.

1852 ஹு ஜனவரிமீ 6௳.

(ஒப்பம்) ஸ்ரீபராசரபட்டர் தெலுங்கில். (ஒப்பம்) விராசாமிய்யர்.
(ஒப்பம) தே. பாலுசுப்பிரமணி முதலியார். மானேஜர்கள்.

---

## 21st September 1852—Provincial Sadur Amin refers Tengalais to a Magistrate about their objection to Vadagalai Vedaparayanam.

ஸீல்:

திருச்சிருப்பள்ளிஜில்லா பிரன்சிபல் சதிர்மீன்கோற்ட்டாறவர்கள் முன்பாக 1852 ஹு செப்டம்பர்மீ 21௳ நடந்தகடவடிக்கையிலிருந்து யெடுத்தெழுதிய டைரியெக்ஸ்திருக்கட்டு.

52 ஹு மனு நெ. 911 லேட் ஜில்லாகோர்ட்டு 1808 ஹுத்திய நெ. 130.

வாதிவகையறாக்களில் ஒருவனான தெங்கலைறெங்காசாரியரால் நாளது மீ 18௳ கொடுக்கப்பட்ட மனுவைபடிக்கலாச்சுது.

ஷை மனுவில் ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்திலும் சப்தபிராகாரத்திலும் வேதத்தினாலேயும் பிரபந்தத்தினாலேயும் செய்யப்பட்ட சகல சடங்குகளையும் தெங்கலையார்மட்டும் செய்ய வேணுமேயல்லாமல் வடகலையார்கள் செய்யக்கூடாதென்றும் அவர்கள் செய்தால் தெண்டனைக்குட்படுவார்களென்றுங்கண்டு ஷை நெம்பரில் தீர்ப்பாயிருப்பதாகவும் வடகலையாரில் ஒருவனான கூறத்தாழ்வாரய்யங்கார் கும்பகோணம் ஜில்லா கோர்ட்டு 1825 ௵த்திய அசல் நெ. 82-ல் வடகலையாருக்கு வேதபாராயணத்தை ஸ்தாபிக்கவேணுமென்று செய்தவழக்கிலும் அந்தபாத்தியம் தள்ளுபடியாய் தீர்ப்பாயிருப்பதாகவும் அந்த தீர்ப்புகளுக்கும் மாமூல்வழக்கத்துக்கும் விரோதமாய் தாங்கள் சுவாமிக்குப்பின்னாலே வேதம்சொல்லிக்கொண்டு வருகையில் வடகலையாரும் தங்களுக்குப்பின்னாலே ஒருதும்பல்கூடி பிலாத்காரமாயி வேதம்சொல்லிவருவதாகவும் அதுசங்கதியைக்குறித்து தான்சிவில்கோர்ட்டில் மனுகுடுத்ததற்கு அந்தவிஷயத்தில் இந்தகோர்ட்டார் பிரவேசித்து 1802 ௵த்திய 3 வது சட்டம் 26-வது பிரிவுப்படிக்கி விசாரணை நடப்பிவிக்கலாமென்று செய்திருக்கிற டைரிகளையும் ஷை தீர்ப்புகளின் நகல்கள் கலக்ட்டர் சன்னதுகளின் நகல்கள்முதலான 10 தஸ்தவேஜுகளை குடுத்திருப்பதாகவும ஷை தஸ்தவேஜுகளை பார்வையிட்டுக்கொண்டு 10 காவலாளிகள் அப்படிசெய்துவருவதற்காக 9 சாக்ஷிகளை விசாரித்துககொண்டு வேதபாராயணத்தில் வடகலையார் யெப்போதும் பிரவேசியாமலிருக்கும்படியாயும் யெந்தசடங்குகளையும் அவர்கள்நடத்தாமலிருக்கும்படியாயும் உததிரவாகவேணுமென்றுங் கண்டிருக்கிறது. செப்டம்பர்௴ 30௳

வாதிகளுடைய சுதந்தரிகத்தின்பேரில் அவர்களுடையயெதிரிகள் பிரவேசிக்கிறதாய் அந்தவாதிகளுடைய கக்ஷியைச்சேர்ந்த மனுதாரன் பிறாதுசெய்துகொள்ளுகிறான். ஆனால் ஷை சுதந்தரியத்தைப்பற்றி வாதிகள்பக்ஷத்தில் செய்ததீர்ப்பானது ஒருவிசை நிறவேத்தப்பட்டிருப்பதனாலே அதின்விஷயத்தில் கோர்ட்டாருடைய கடைமையானது முடிந்துபோனதாய் யெண்ணவேண்டியிருக்குது. மேல்சொன்னபடி தீர்ப்புநிறவேறி அனேகவருஷமாய்விட்டபடியால் இப்போது ஷை சுதந்தரிகத்தின் விஷயத்தில் யெதிரிகள் மறுபடியும்பிரவேசித்தால் அதை 1802 ௵த்திய 3-வது சட்டம் 26-வது பிரிவுப்படிக்கி கோர்ட்டாருடைய கட்டளைக்கி யெதிர்த்த குத்தமென்றெண்ணவும் நடப்பிவிக்கவும் கூடாது. வாதிகளிந்த சங்கதியைப்பத்தி சதிர்க்கோர்ட்டாரவர்களிடத்தில் குடுத்தபிட்டிஷன்பேரில் அவர்கள் அனேகந்தடவைகளில் செய்திருக்கிற உத்திரவுப்படிக்கும் மாஜீஆகஜலேரி கோர்ட்டார் 41 ௵ நவம்பர்௴ 19௳யிலும் செய்திருக்கிற உத்திரவுப்படிக்கும் வாதிகளுடைய சுதந்தரிகத்தின் விஷயத்தில் யெதிரிகள் பிரவேசித்ததைப்பத்தி புதுசாய் நஷ்டபிறாதாவது செய்துகொள்ளவேணும் அல்லது 35 ௵ டிசம்பர்௴ 14௳யுள்ள புரேவின்ஷியல் கோர்ட்டார் நடவடிக்கைக்கி அந்தகோர்ட்டாரால் மேஜஸ்திரேட்டுக்கனுப்பிய யெக்ஸ்திராக்டில் யிப்படிப்பட்ட விஷயத்தில் மேஜஸ்திரேட்டார் நடத்தவேண்டியகாரியங்களை தெளிவாய்க்கண்டிருப்பதனாலே மேஜஸ்திரேட்டாறவர்களிடத்திலாவது பிறாதுசெய்துகொள்ளவேணுமென்றும் கோர்ட்டாறவர்கள் உத்திறவு செய்கிறார்கள்.

(ஒப்பம்) ஜே. கார்டன். பிரன்சிபல் சதர் அமீன்.

52 ௵ அக்டோபர்௴ 8௳ குடுக்கலாச்சுது.

சரியான நகல். (ஒப்பம்) டப்ளியு. போயத், ஆக்டிங் பிரன்சிபல் சதர் அமீன்.

சரிபார்த்தது (ஒப்பம்) கிஷ்ணமா, ஆ. சி. றி. டீப்.

---

## 19th January 1858—Devaraja Bhatter fined by Trustees.

நெ. 15.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் யேட் பேஷ்க்கார் கிருஷ்ணய்யருக்கு.

ஷை கோவில் அர்ச்சகம் தேவராஜபட்டனென்பவன் அற்பசி௴ 28௳யில் பெருமாள் அமுதுசெய்த பொங்கல் தளிகைசேனைமுதலியார் சன்னதிக்கிப்போய் அமுதுசெய்யும் போது வ. மாகாணிபொங்கல்யெடுத்து ககவண்டையில் மறைத்துவைத்திருந்த தப்பிதத்துக்காக ரூ. வ-யும் டிசம்பர்௴ 15௳யில் திருப்புளச்சி பூஜைக்காக ஷை யான் உடனேவராமல்

தாமசப்படுத்திவந்ததனுல், விடியக்காலமே ஷை திருப்புளச்சி அமுசியாமல் அட்டிப்பட்டதற்காக ரூ. இ நீர் அபராதம் விதித்ததைக்குடாமலும் வாக்குமூலம் யெழுதிவைக்கிறதில்லையென்றும் நிருகரித்ததாகவும் சிலவிவரங்கண்டு டிசம்பர் ௴ 10உ யிலும் 15உ யிலும் நீரெழுதிய 356, 361 இந்த இரண்டுநெம்பர் அர்ஜியில்கண்டபடிக்கி ஷை தேவராஜபட்டன்செய்த தப்பிதத்துக்காக நீர்விதித்த அபராதத்தை குடாமலும் வாக்குமூலம் யெழுதிவைக்கிறதில்லையென்றும் நிராகரித்ததற்காக ஷை தேவராஜபட்டனுக்கு ரூ. 1 அபராதம் விதித்திருக்கிறோம்.

ஷை அபராதம் ரூ. 1ம் நீர் இறண்டுதடவையில் விதித்தஅபராதம் ரூ. ௩-லும் உடனே அவனிடத்தில் வசூல்செய்து ஆதாயம்வைக்கிறதும்தவிர உத்திரவுப்படி அபராதம்செலுத்திவைக்கலாம் யேதாவது அப்பியந்திரம்செய்தால ஷை அபராதம் செலுத்துகிறவரையில் அவனை ஆறிவிட்டவாசலுக்குளவிடாமல் வெளியேநிருத்திவைத்து அவனுடைய அர்ச்சகம் முறைவந்தால் வேறே அர்ச்சகனைக்கொண்டு நடப்பிவித்துவரவும்.

1858 ௵ ஜனவரி ௴ 19உ.

(ஒப்பம்) ஸ்ரீ வேதவியாச திருமலைபட்டர். (ஒப்பம்) வீராசாமியையர். (ஒப்பம்) தே. பாலசுப்பிரமணியம், மானேஜர்கள்.

---

## 29th May 1858—Lalgudi Head Police report to the Head Assistant Magistrate about Vadagalais Iyal, their commitment and asking for proclamation against Vadagalais' doing similar act.

1858 ௵ மே ௴ 29உ. லாலுகுடி.

நெ. 145.

திருச்சினாப்பள்ளி ஜில்லா யே. அ. மேஜிஸ்திரேட்டாகிய மகா-ா-ா-ஸ்ரீ மேஸ்த்தர் வெச்சு. யெம். எஸ். கிறீம் துரை யவர்கள் சமுகத்துக்கு.

லாலுகுடி தாலூகா யேட் போலிஸ் காதர் சாயபு வணக்கமாய் சலாம்செய்து யெழுதிக்கொண்ட அர்ஜி. ஸ்ரீறங்கத்தில் நாளது மீ 9 உயில் தீர்ப்பு முதலானதுகளுக்கு விரோதமாய வடகலையார் இகல்யென்கிற சடங்கு செய்ததை கேட்ட தென்கலை ஆனை வெஙகிட்டரெங்கய்யஙகார் வகையறா பேர்களை அடித்து கத்தியால் வெட்டி கனமான காயப்படுத்தினதாக குற்றம் சாட்டப்பட்ட காவலாளிகளை குறித்து கிறமபிரகாரம் நடந்துகொள்ளுகிறதாகவும் மற்ற யிருவகை பிறதுகள் விசாரணையாக யிருக்கிறதில் யெத்தை யெப்படி நடததவேணுமோ அந்தப்படி நடதந அதை குறிததம தீர்ப்பு முதலான தஸ்தவேஜ்களை பார்வையிட்டுவருவதில் இருக்கிற சாரத்தையும் இனி கலகம நடவாமலிருக்கவேண்டிய விதத்தையும் கணடு அதை குறிததம் விபரமாய் அறிக்கைசெய்கிறதாக நாளது மீ 25உயில் 132 நெ. அர்ஜியெழுதி யிருப்பதுனுலே விசிதமாயிருக்குமே.

ஷை ஆனை வெஙகிட்ட றெங்கய்யங்கார் வகையறா பிராதில் சம்மந்தப்பட்ட முக்கிய காவலாளிகள் சிலர் நாளது மீ 27உயில் ஆஜரானதினுலே அவர்களை விசாரணைசெய்ததில் பூரணமாய் குற்றஞ்சாட்டப்பட்டு ஷை நம்பரை முடிவுசெய்து நகல் தஸ்தவேஜ்களுடனே கோர்ட்டுக்கு கமமிட்டு செய்திருக்கிறதும் தவிர அதிகளை வகையறா தஜ்தவேஜ்கள் நகல் 45யும் சமுகத்தின் பார்வைக்காக அனுப்பி யிருக்கிறேன்.

தடயம கொண்டுபோன காவலாளிகளில் சிலர் வாரண்டுக்கு தவ்ல மறவாயிருக்கிறவர்களை பிடித்துவர வாரண்டின் சேவகனை மறுபடியும அனுப்பியிருக்கிறேன். ஆஜரானபின் விசாரித்து கிரமப்பிரகாரம் நடந்துகொள்ளுகிறேன்.

மைத்த தென்கலை வடகலை இருகட்சி பிறாதுகளிலும் பிகிலியால் செய்திருக்கிற தீர்மானம் விபரத்தைக்கொண்டு 136, 138, 139, 140, 141, 142, 143, 144 அர்ஜிகள் எழுதியிருக்கிறேன்.

இதுவிஷயத்தில் தென்கலையார் வடகலையார் ஆஜர்செய்த தஸ்தவேஜ்கள் 47யும் டேபிள்படி இதிலடக்கமாய் அனுப்பியிருக்கிறேன்.

அதில் தெங்கலையார் பட்சத்தில் மேலான கோர்ட்டாரவர்களுடைய தீர்ப்பு முதலானதுகளும் கலக்டர் துரையவர்களுடைய உத்திரவுகளும் அநேகம் தஸ்தவேஜுகள் பிறந்திருக்கிறதில் ஸ்ரீறங்கம் சப்தபிருகாரத்திலும் கோவில் முதலான இடங்களிலும் வேதத்தாலும பிறபந்தத்தாலும் செய்யப்பட்ட சகலவித சடங்குகளும் தெங்கலையாரே செய்யவேணுமென்றும் கோவிலே அவாளுதென்றும் வடகலையாருக்கு யாதொரு சம்பந்தமில்லையென்றும், அப்படிப்பட்ட தெங்கலையாருடைய சுதந்தரவிஷயத்தில் வடகலையார் பிரவேசிக்கக்கூடாதென்றும், பிரவேசித்தால் தெண்டிக்கப்படுமென்றும் வெக்தமாயும் தெளிவாயும் கண்டிருக்கிறது.

அவைகளுக்கு விரோதமாய் வடகலையார் வேதபாராயணம் செய்ததை தடுக்கவேணுமென்று தெங்கலையாரான ரெங்காச்சாரி 50 வருஷத்தில் மேஜிஸ்திரேட்டில் பிறுதுகொடுத்து போலீஸ் அமீனு விசாரித்து தெரியப்படுத்தினதில் தெங்கலையாரை சிவிலுக்கு போகவேணுமென்று ஷை வருஷம் மேமீ 25உயில் 67 வது நெ. உதத்திரவு ஏர்ப்பட்டு அதர்க்கு பின்னிட்டகாலமான 52ம் வருஷத்திய பிரன்சிப்பல் சதிரமீன் கோர்டில் ஷையான் பிராதுசெய்துகொண்டதற்கு வாதிகள் சுதந்தரிகவிஷயததில் பிறந்த தீர்ப்பானது ஒரு விசை நிறைவேர்றப்பட்டிருககிறதாகவும அதில் எதிரிகள் பிரவேசிததால் புதுசாய நஷ்டப்பிறுது செய்துகொள்ளவேணுமென்றும் அல்லது 31 வருஷ் டிசம்பர்மீ 14உ யுள்ள பிரன்சிப்பல் கோர்ட்டாரவர்களுடைய எக்ஸ்திராக்டு மேஜிஸ்திரேட்டுக்கு அனுப்பப்பட்டிருப்பதில் இப்படிப்பட்ட விஷயத்தில மேஜிஸ்திரேட்டார் நடத்தவேண்டிய காரியங்களை தெளிவாய் கண்டிருப்பதினாலே மேஜஸ்திரேட்டில் பிறுது செய்துகொள்ளவேணுமென்றும் ஷை பிரன்சிபல் சதரமீனகோர்ட்டாரவர்கள் தீர்மானித்திருக்கிறார்கள்.

இப்படியாய் சகலவிதத்தாலும தெங்கலையாருக்கு ஸ்ரீறங்கம் சப்தபிருகாரத்திலும் கோவில்முதலான இடங்களிலும் வேதத்தாலும் பிரபந்தத்தாலும் செய்யும் சடங்குகள் பாத்தியமென்று ஸ்திரப்பட்டிருக்கிறது.

அப்படிப்பட்ட மேலான கோர்ட்டாரவர்களுடைய தீர்ப்பு முதலானதுகளுக்கும் கலக்டர் துரையவர்களுடைய உத்திரவுகளுக்கும் விரோதமாய் இயல் நடப்பிவித்து தெங்கலையாரான ஆனை வெங்கிட்டரெங்கய்யங்கார வகையறுப்பேர்களை கனமான காயப்படுத்தின வடகலையார்களை கோர்ட்டுக்கு சமிட்டு செய்திருந்தாலும் மற்றவடகலையார் இனிமேலான கோர்ட்டாரவர்களுடைய தீர்ப்புகளுக்கும் கலக்டர் துரையவர்களுடைய உத்திரவுகளுக்கும் விரோதமாய் வேதத்தாலும் பிரபந்தத்தாலும் சப்தபிருகாரங்களிலும் கோவில முதலான இடங்களிலும் யாதொரு சடங்குகளும செய்யாமலும் கலகத்துக்கு ஆஸ்பதப்படாமலும இருககும் பொருட்டு இஸ்தியாருடன் விபரமான உத்திரவு அனுப்பிவிக்கும்படி உத்திரவானால் ஷை வடகலையார்களால் இனி இப்பேர்க்கொத்த கலகம் நேரிடுகிறதற்கு எதுவன்னியிலிருக்குமென்று காணப்படுகிறது. ஷை இருதாத்தாரும் ஆஜர் செய்யலான தஸ்தவேஜிகள் சமுகததில் பார்வையிட்டானவுடனே உடையவர்களுக்கு சேர்ப்பிக்க வாபஸ் அனுப்பும்படி உத்திரவாகவேணும்.

(ஒப்பம்) காதர்சாயபு, யே. போ.

சரியான நகல், யெச். யெம். யெஸ். கிரீம், யெட். அ. மே.

---

## 8th May 1859.—Devaraja Bhatter fined by Trustees.

நெ. 152.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் யேட் பேஷ்கார் முத்துசாமியய்யருக்கு,

ஷை கோவில் அர்ச்சகம் தேவராஜ பட்டன் யென்பவன் நாச்சியார் நவராத்திரி உத்ஸவம் யெட்டாந்திருநாள்தினத்தில் நாச்சியார் எழுந்தருளி திருப்பணியாரம் அய்சியானவுடனே கொரட்டு மணியகாரன் உத்திரவுப்படிக்கும் மாமூல்படிக்கும் மணி யெடுத்து தொலுக்கு ஆரம்பம் செய்யாமல் அட்டியாகும்படிசெய்து கொரட்டு மணியகாருடைய உத்திரவை நிருகரித்த சங்கதியை குறித்து விசாரணைசெய்து வாக்குமூலங்கள் சகிதமாய் மாஜி யேட்பேஷ்கார் எழுதிக்கொண்ட அர்ஜியின்பேரில் ஷை தேவராஜபட்டனுக்கு ரூ. 1 அபராதம் விதித்

து தகை வசூல்செய்து ஆதாயம் வைக்கும்படி 58௵ நவம்பர் ௴ 8௳யில் அனுப்பிய 383 வது நெம்பர் உத்திரவுப்படி ஷையானை அபராதம் செலுத்தச்சொல்லி கேட்டதற்கு குடுக்கிற தில்லையென்று உத்திரவை நிருகரித்து அத்துமீரி பப்ளிக்கு கசேரியில் அநேக விதங்களாய் பேசினதாக வாங்கின மாசர் சகிதமாய் சிலவிபரங்கண்டு நவம்பர் ௴ 17௳யில் மாஜி பேஷ்கார் யெழுதிக்கொண்டிருக்கிற 417 நெ. அர்ஜியை பார்க்குமிடத்தில் ஷையான் நெடுகிலும் இப்படியே அத்துமீறி நடந்துவரப்பட்டவனாக காணப்படுவதினாலே அதற்காக ஷையானுக்கு ரூ. 2 அபராதம் விதிக்கப்பட்டிருக்கிறது. அதையும முன் விதிக்கப்பட்டிருக்கிற ரூ. 1ம் உடனே அவனிடத்தில் வசூல்செய்து ஆதாயம் வைத்து தெரிவிக்கிறதுமல்லாமல் மறுபடியும் உத்திரவுப்படி அபராதம் செலுத்தாமல் ஏதாவது தண்டைகள்செய்தால் உடனேஅவனை ஆரிவிட்ட வாசலுக்குள் விடாமல் நிறுத்திப்போட்டு அவனுடைய அர்ச்சகமுறையை ஜப்தியில்வைத்து வேறே அர்ச்சகனைக்கொண்டு சர்க்கார் மனுஷியனைப் பார்த்துவரும்படி திட்டம் செய்து அது சங்கதியை தெரியப்படுத்தவும்.

1859௵ மேமீ 8௳.

(ஒப்பம்) ஸ்ரீஉத்தமநம்பியங்கார். (ஒப்பம்) வீராசாமியையா. (ஒப்பம்) கோபாலசாமி முதலியார். மானேஜர்கள்.

---

## 17th November 1859—Narasinga Bhatter fined by Trustees

நெ. 501.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் யேட் பேஷ்க்கார் மூத்துசாமியையருக்கு.

நவம்பர் ௴ 12௳ நீர்யெழுதிய 492-வது நெ. அர்ஜியில்கண்டபடிக்கி ஷை தேதி தினம் காலமே திருமஞ்சனம்வந்தவுடனே அன்னியதினம் முறைக்காரனான அர்ச்சகன் நறசிங்கபட்டனென்பவன் விசுவரூபத்துக்கு திருக்காப்பு நீக்கவருமல் றெண்டோழிகைவரையில் அட்டிப்பட்டதற்காக ஷை நறசிங்கபட்டனுக்கு பாரி அபறுதம்விதிந்து தகுந்தபடி செய்யவேண்டியதாயிருந்தபோதிலும அவனை நாம் ரூபரூவில் வரவழைத்து விசாரணைசெய்ததில் அன்னியதினம் தன்னால் அட்டியானது தப்பிதந்தானென்றும் இனிசரியாய் நடந்துவருவதாகவும் றொம்பவும்கேட்டுக்கொண்டதினாலே ஷை தப்பிதத்துக்காக உம்மால் விதிக்கப்பட்டதாய் கண்டிருக்கிற அபறுதம் ரூ. 3-மே இந்தத்தடவை போதுமானதாயிருக்கிறது. ஆகையால் ஷை அபறுதம் ரூ. 3 யும் உடனே அவனிடத்தில் வசூல்செய்து ஆதாயம்வைத்துக்கொண்டு இனி அப்படிக்கி சுவாமிகாரியத்தில் யேதாவது அட்டிசெய்ததாக தெரியவருமேயாகில் பாரி அபறுதம்விதித்து தகுந்தசிக்ஷைசெய்விககப்படும் யென்று கண்டிப்பாய்அரிவிக்கவும். ஒருவாரத்துக்குள் ஷை அபறுதம் செலுத்திவைக்காவிட்டால் ஆரிவிட்டவாசலுக்குள் விடாமல் நிருத்தல்செய்து அபறுதமசெலுத்தினபிறகு உள்ளேவிடவும்.

பின்னால் ஷை அர்ஜியில்கண்டபடி மூதல்நாள்ருத்திரி கோவிலுக்குள் கொல்லன் சோதினைசெய்துவரும்போது அகப்பட்டதாய் ஆசரில்செய்த சாவிமூத்திறை ஷை நறசிங்கபட்டனுடைய சொந்தமென்றும் கோவில்சாவிகள் அல்லவென்றும் தெரியவருவதினாலே ஷை சாவிமூத்திறையை ஷை நறசிங்கபட்டனிடம் குடுத்துவிடவும்.

1859௵ நவம்பர் ௴ 17௳

(ஒப்பம்) ஸ்ரீபராசரபட்டர் தெலுங்கில். (ஒப்பம்) தே. கஞ்சமலைமுதலியார். (ஒப்பம்) க. வறதாசாலு மானேஜர்கள்.

---

## 20th November 1859—Krishna Bhatter, Kuppa Bhatter's son Krishna Bhatter and Devaraja Bhatter fined by Trustees, also Pandari Pichuviengar.

நெ. 522.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் யேட்பேஷ்க்கார் மூத்துசாமியையருக்கு.

நாளது௴ 17௳ நீர்யெழுதிய 500-வது நெ. அர்ஜிவகையறா வாக்குமூலங்களைப் பார்வையிட்டதில் அற்பசி௴ 20௳ யிலும் 21௳ யிலும் மகா-ா-ா-ஸ்ரீ டிப்டிகலக்டரவர்கள் பெருமாள் நாச்சியார் சேவிக்கவந்தபோது சன்னதியில்கொடுத்த ரூ. ந-வ-ம் ௸ தேதி முறைக்கார அர்ச்சகம் கிருஷ்ணபட்டர் 1 குப்பாபட்டர் குமாறர் கிருஷ்ணபட்டர் 1 தேவராஜபட்டர் 1 பண்டாரி பிச்சுவய்யங்கார் 1 இவர்கள் தங்களைசேரவேணுமென்றுசொல்லி உண்டிகையில்போடாமல்வைத்திருக்கிறது பெசகானகாரியமாயும் இதுவரையிலும் நடந்துவந்த யேர்ப்பாட்டை றத்துசெய்யவேணுமென்கிற யெண்ணங்கொண்டு வினை துரோகபணைசெய்கிறதாகவும் தெரியவருகிறதனாலே ௸ யார்களிடத்திலிருக்கிற ரூ. ந-வ-ம் அவர்களிடத்தில் உடனேவசூல்செய்து ஆதாயம்வைத்து அனுப்புகிறதுந்தவிர வழக்கத்துக்கும் இதுவரையில் நடந்துவந்த மாமூலுக்குவிரோதமாய் உடனே உண்டிகையில் சேர்ப்பிவிக்காமல் இருந்தகப்பிதத்துக்காக அர்ச்சகம் மேலகண்ட கிருஷ்ணபட்டருக்கு ரூ. 1 குப்பாபட்டர் குமாறன் கிருஷ்ணபட்டருக்கு ரூ. வ தேவராஜபட்டருக்கு ரூ. இ பண்டாரி பிச்சுவய்யங்காருக்கு ரூ. இ இந்தப்படிக்கி அபராதமும் வசூல்செய்து ஆதாயம்வைத்து அனுப்பவும். ஒருவாரத்துக்குள் அபராதத்தை செலுத்திவைக்காமலிருந்தால் உடனே அறிவிட்டவாசலுக்குள்விடாமல் நிருத்தல்செய்து வசூலானதின்பேரில் உள்ளேவிடவும்.

1859௵ நவம்பர்௴ 20௳

(ஒப்பம்) ஸ்ரீ சுதர்சனபட்டர். (ஒப்பம்) தே. கஞ்சமலை முதலி. (ஒப்பம்) க. வரதராஜலு. மானேஜர்கள்.

---

## 9th January 1860—Collector to Trustees that the Lalgudi Sub-Magistrate was directed not to assist Devaraja Bhatter.

ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் மானேஜர்களாகிய ஸ்ரீ பராசரபட்டருடைய மைனருக்காக ஸ்ரீ பராசரசுதர்சனபட்டர், தே. கஞ்சமலை முதலியார், ம. வீராசாமிநாயக்கருக்காக க. வரதராஜலுநாயக்கர் அவர்களுக்கு.

உங்களால் நிருத்தல் செய்யப்பட்டிருக்கிற ௸ தேவஸ்தானம் அர்ச்சகம் தேவராஜபட்டனை உங்களுடைய உத்திறவு இல்லாமல் கோவில் வேலையில்பிரவேசிக்கும்படி லாலுகுடி தாலூகா போலீஸ்அமீனா உத்திரவுகொடுத்து கல்லல் உண்டாகும்படி செய்திருக்கிறதாக சிலவிபரங்கண்டு நாளது௴ 9௳ யெழுதிய அர்ஜிவந்தது.

அதுகாரியத்துக்கு இனிமேலப்படி கோவில்காரியங்களில் யெவ்வளவும் பிரவேசிக்காமலிருக்கும்படியாய் ௸ போலீஸ்அமீனா நாரணய்யருக்கு அனுப்பியிருக்கிற உத்திரவுக்கு நகல் இத்துடனே உங்களுடைய பார்வைக்காக அனுப்பியிருக்கிறது.

௸ போலீஸ்அமீனா தேவஸ்தானம் யேட்பேஷ்க்கார் கொல்லன் இவர்களுக்கு போட்டிருக்கிற அபராதத்தை மாப்புசெய்யவேணுமென்று சிலபழயதஸ்தவேஜ்களுடனே டிசம்பர்௴ 24௳ யெழுதிய அர்ஜியில் கண்டிருக்கிறீர்கள். அந்ததஸ்தவேஜ்களையும் போலீஸ் அமீனா விசாரணை நடத்திவருகிற தஸ்தவேஜ்களையும் பார்வையிடப்பட்டது.

ஆனால் அந்தஅபராதம் சச்சரவு குத்தத்துக்காக போட்டதாயிருக்கிறபடியினாலே அதை உறுதிசெய்திருக்கிறது. வேறேவிதமாய் உத்திரவுசெய்ய நிமித்தியம் காணப்படவில்லை ௸ அர்ஜியுடனேவந்த பழயமிக்கார்டுகளையும் பேரிஸ்துப்படி இத்துடனே வாப்ஸ்செய்திருக்கிறோம்.

1860௵ ஜனவரி௴ 9௳, திருச்சிறாப்பள்ளி.

(ஒப்பம்) மு. கிருஷ்ணறாவு யேட். ஐ. மே. பற்டுனா மேஜஸ்திரேட்டு.

---

## 12th January 1860—Trustees' order to Peshkar to invoke Lalgudi Sub-Magistrate's assistance about keeping out Devaraja Bhatter.

நெ. 10. 1860௵ ஜனவரி மீ 12௨

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் யேட் பேஷக்கார் முத்துசாமியயருக்கு.

ஷை கோவில் ஆரிவிட்டான் வாசலுக்குள்விடாமல் வெளியில் நிருத்தப்பட்டிருக்கிற அர்ச்சகம் தேவருஜபட்டன்யென்பவன் போலீஸ்அமீனவை கூட்டிக்கொண்டு நம்முடைய உத்திறவு சிவாயி ஆரிவிட்டான்வாசலுக்குள்போய் தருகிறதமாய் வேலையில்பிறவேசித்து சுவாமிகாரியம் கல்லலுண்டாகும்படி செய்ததைக்குறித்து அஜூர் மேஜஸ்டிரேட்டு துரையவர்கள் சமுகத்துக்கு அர்ஜியெழுதினதின்பேரில் ஷை போலீஸ்அமீனவுக்கு பெறந்திருக்கிற உத்திரவுக்கு நகல் இத்துடன் அனுப்பியிருக்கிறதும்தவிர ஷை தேவருஜபட்டன் இனி ஆரிவிட்டான் வாசல்கொல்லனை நிருகரித்துக்கொண்டு உள்ளேயாவது மண்டபத்திலாவதுவோய் தருகிறதச்செய்தாலும் வேலையில் பிரவேசித்தாலும இன்னும்யாருவதுவந்து தண்டைகள்செய்தாலும் நீர் அதுசங்கதியை தெரியப்படுத்திக்கொண்டால் வேண்டியபந்தோபஸ்துசெய்து குடுக்கும்படியாய் லாலுகுடிதாலூகா யேட்போலீஸ்தாறவர்களுக்கு யாதாஸ்துயெழுதியிருக்கிறோமாகையால் ஷை தேவருஜபட்டனுவது வேறேயாராவது கோவிலுக்குள்ளாகிலும் சுவாமிமண்டபத்திலிருக்கும்போதாகிலும் வந்துதண்டைகள்செய்தால் அதுசங்கதியை ஷை யேட் போலீஸ்தாறவர்களுக்கு யாதாஸ்துமூலமாய் தெரியப்படுத்தி பந்தோபஸ்தின்பேரில் சுவாமிகாரியத்தில் கல்லலும் தவக்கமுமன்னியில் நிறவேத்திவரவும்.

(ஒப்பம்) ஸ்ரீ ப. சுதர்சனபட்டர். தெலுங்கு (ஒப்பம்) தே. கஞ்சமலை முதலியார். (ஒப்பம்) க. வரதராஜலு, மானேஜர்கள்.

---

## 29th January 1860—Devaraja Bhatter dismissed by Trustees.

நெ. 67.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் டிப்ட்டி பேஷ்க்கார் முத்துக்குமாற பிள்ளைக்கு.

யென்னவென்றால் வெளியில் நிருத்தியிருக்கிற அர்ச்சகன் தேவருஜபட்டன் யென்கிறவன் உத்திறவு நிருகரித்து கொல்லர் தடங்கலும் மீரி கூட்டத்துடனே கோவிலுக்குள் பிரவேசித்து கலகமும் சுவாமி காரியம் குந்தகமும செய்துவருகிற சங்கதியை குறித்து விசாரணை செய்து நாளது மாசம் 28௨ யெழுதிய வது நெ. அர்ஜீயும் அதிலடக்கமாய் அனுப்பிய வாக்குமூலம் 3ம் வந்தது.

அது காரியத்துக்கு ஷை அர்ஜி வகையரு வாக்கு மூலங்களை பார்வையிட்டதில் ஷை தேவருஜபட்டன் யென்கிறவன் சில நாளாய் கூட்டத்துடனே ஆரிவிட்டான் கொல்லனை நிருகரித்துபோட்டு பலாத்காரமாய் உள்ளே பிரவேசிக்கிறதும் அதை குறித்து யாருவது கேட்டால் சச்சரவுக்கு ஆரம்பம் செய்கிறதும் வேலைக்காறர்களை கல்லல்பண்ணி சுவாமிகாரியம் குந்தகமாகும்படி செய்விக்கிறதும் இப்படிக்கெல்லாம் செய்துவருகிறதாயும் நாளது தைமீ 16௨ தை உத்ஸவம் முதல்திருநாள் தினம் காலமே கூட்டத்துடனே கொல்லர்களை நிருகரித்துபோட்டு உள்ளே வந்து கொடியேத்த மண்டபத்திலிருந்த பெருமாளிடத்தில் போய் தங்க ஸ்ரீசடகோபத்தையும் உத்திரகிண்ணி முதலானதுகளையும் யெடுத்து வச்சுக்கொண்டு நாலு நாழிகை வரையில் குந்தகமும் கலகமும் சமாதானத்துக்கு விரோதமாயும் செய்துவருகிறதாய் தெரியவருகிறதும் தவிர இவன் யேட் பேஷ்க்கார் வகையருபேரில் தப்பு பிறுது குடுத்து பொய்சாக்ஷிகளைகொண்டு ருசுப்படுத்தி வச்சவனும் செகிகிலும் தண்டைசெய்யப்பட்டவனும் மானேஜர்களுத்திரவுக்குள்ப்பட்டு நடக்காதவனாயிருப்பதனாலேயும் இப்படிப்பட்டவனை அர்ச்சகம் வேலையில் வச்சிருப்பதில் சுவாமி திருவாபரணங்களுக்கு அபாயமும் அடிக்கடி குந்தகமும் கலகமும் சேரிடுகிறதனாலேயும் இனி ஷை யாளை வேலையில் வைக்கிறது யெவ்வளவும் யுக்தமாயும் சரியாயும் காணப்படாத்தனாலேயும் ஷை யாளை வேலையிலிருந்து நீக்குதல் செய்திருக்கிறோம்.

அவன் இனி ஆரிவிட்ட வாசலுக்குள் போகாமலும் யாதொரு வேலையில் பிறவேசிக்காமலும் யெல்லாருக்கும் கண்டிப்பாய் தாக்கீது செய்து நிருத்திப்போடவும் அப்படிக்கில்லாமல் யேதாவது அவன் உத்திறவு நிருகரித்து உள்ளே பிறவேசித்து தண்டைகள் செய்தால் உடனே விசாரித்து வாக்கு மூலங்கள் சகிதமாய் தெரியப்படுத்தவும். அவன் முறையை மைத்த அர்ச்சகாளை கொண்டு நிறவேத்தி வரும்படிக்கும் வேலை பார்க்கப்பட்டவனை வருமானம் பெத்துக்கொள்ளும்படியாயும் திட்டம் செய்யவும்.

1860ஞ ஜனவரிமீ 29உ

(ஒப்பம்) ஸ்ரீபராசர பட்டர் தெலுங்கு. (ஒப்பம்) தே. கஞ்சமலை முதலியார்.
(ஒப்பம்) க. வறதருஜலு. மானேஜர்கள்.

---

## 4th February 1860—Magistrate's order to Trustees that the Lalgudi Head Police was ordered to prohibit Devaraja Bhatter from doing duties.

ஸீல்.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் மானேஜர்களாகிய ஸ்ரீபருசரபட்டர் மைனருக்காக பருசரசு தர்சனபட்டர், தே. கஞ்சமலை முதலியார், வீருசாமிய்யருக்காக க. வறதருஜலு நாயகர் இவர்களுக்கு.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் அர்ச்சகர்களில் ஒருவனாகிய தேவருஜபட்டனென்கிறவன் கோவில்காரியங்களில் சரியாய்நடவாததினித்தியம் அவனுக்கு புத்திவரும்பொருட்டாயிலாகாயதுமுதல்க்கொண்டு நடந்துகொண்டுவருகிற வழக்கப்படி அவனுடைய ஊழியமென்கிற வேலைகளில் பிறவேசிக்காமலிருக்கும்படி உங்களால் உத்திறவுசெய்யப்பட்டிருந்ததில் அவன்நிருகரித்து சுவாமிக்கு சமீபம் திருவாபரணம் முதலானது யிருக்கப்பட்டயிடத்தில் பிறவேசித்து சுவாமிசடகோபம் முதலானதை கையில்யெடுத்துக்கொண்டு பொழக்கம்செய்கிறதுடனே கலகல்செய்யவேணுமென்கிற துணிகறமாய் சில்பேர்களை கூட்டம்சேர்த்துக்கொண்டிருக்கிறதாகவும் அதனாலே சுவாமிசொத்துகளுக்கு அபாயம்நேரிட யிடமாயிருக்கிறதென்றும் சுவாமியிருக்கப்பட்ட யிடத்துக்கு 30-அடிக்கிசமீபமாய் திருவாபரணங்களும் தங்கம் வெள்ளி பாத்திரங்களும் புக்கிஷமுமிருக்கப்பட்ட யிடத்தில்மட்டும் அவன்வந்து பிரவேசிக்காமலிருக்கும்படி தாக்கீதுசெய்ய உத்திரவாகவேணுமென்றும் நாளதுமீ 2உ யெழுதிய அர்ஜிவந்தது.

அந்தப்படி ஷை தேவருஜபட்டனுக்கு கண்டிப்பாய்அறிவித்து பந்தோபஸ்துசெய்துகொடுக்கும்படியாய் லாலுகுடிதாலூகா யேட் போலீசுதாருக்கு கண்டிப்பாய் தாக்கீது அனுப்பியிருக்கிறோம்.

1860ஞ பிப்பிரவரிமீ 4உ. மு. திருச்சினாப்பள்ளி.

(ஒப்பம்) ஜான்பறடு, *Magistrate.*

---

## 20th February 1860—Trustees' order to Peshkar to prevent Devaraja Bhatter from approaching the Deity.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் டிப்ட்டி பேஷ்க்கார் முத்துக்குமாற பிள்ளைக்கு.

அர்ச்சக தேவருஜபட்டனென்பவன் நாளது மாசிமீ 5உ ராத்திரி உத்திரவன்னியில் சன்னதிக்குள் அராகிதமாய் பிரவேசித்து சுவாமியண்டையில் நின்றுகொண்டிருந்த சங்கதியை குறித்து விசாரணை செய்த வாக்கு மூலங்கள் சகிதமாய் நாளது மாசம் 16உ நீ யெழுதிய 66 வது நெ. அர்ஜி வந்தது.

அது காரியத்துக்கு ஷை தேவருஜபட்டன் ஷை கோவிலுக்குள் திருவாபாரணம், பாத்திரம் தங்கம் வெள்ளி வகையறு யிருக்கப்பட்ட இடங்களிலும் சுவாமியண்டையிலும தன்

சுவயிச்சையாய் பிரவேசிக்கக்கூடாதென்று அசூர் மேஜஸ்திரேட்டு உத்திரவு சாதருயிருக்கிறதுமல்லாமல் லாஜுகெடிதானுகா பேட் போலீஸ்தாராலும் தாக்கீது செய்யப்பட்டிருக்கிறதாகவும் ஷியார் யாதாஸ்தும் வந்திருக்கிறது. ஆகையால இனி ஷை யான் ஷை உத்திரவுகளுக்கு விரோதமாய் உத்திறவு சிவாயசுவாமி சன்னதிக்குள்ளாவது திருவாபரணம் வகையறுக்க விருக்கப்பட்ட ஞழிகோட்டவாசலுக்குள் கருகூலம்முதலான யிடங்களிலாவது போகக்கூடாதென்று கொல்லனைக்கொண்டும் சன்னதிவாசல் சேவுகர்களைக்கொண்டும் தடுக்கும்படி தாக்கீது செய்து ஜாக்கிருதையாயிருக்கும்படி திட்டம்செய்யவும். அப்படிக்கி தாக்கீதுசெய்தும் உத்திரவைமீறி ஷையான் பிரவேசித்தால் உடனே கிருமமுன்ஸீபு டாணுசேவுகர்களுக்குச் சொல்லி அனுப்பி அவர்களைக்கொண்டு தடுக்கும்படிசெய்து நடந்தவிவரத்தைக்கண்டு உடனே விசாரணைசெய்து வாக்குமூலங்கள் சகிதமாய் தெரியப்படுத்திக்கொண்டுவரவும். நீர் இதைக்குறித்து கிருமமுன்ஸீபு டாணு சேவுகர்களுக்குச்சொல்லி அனுப்பிவித்தால் அவர்கள்உடனே வரும்படியான தாக்கீது பேட்போலீஸ்தாருல் தரிவித்தும் குடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் அந்தப்படிநடந்துவரவும்.

1860௵ பிப்பிரவரி௴ 20௳

(ஒப்பம்) ஸ்ரீ. ப. சுதர்சனபட்டர் தெலுங்கில். (ஒப்பம்) தே. கஞ்சமலை முதலியார். (ஒப்பம்) க. வரதருசலு, மானேஜர்கள்.

---

## 16th January 1861—Narasinga Bhatter and Golla Naick suspended by Trustees.

நெ. 32.

ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் பேட் பேஷ்க்கார் அப்பாசாமிய்யருக்கு,

மார்கழி௴ 14௳ தினம் காலமே வெடிய ஒருநாழிகைக்கி அர்ச்சகம் நரசிங்கபட்டனும் ஆரிவிட்டான் கொல்லராமகிருஷ்ண ஞயக்கனும் சன்னதிவாசல் கதவைத்திறந்து வழக்கத்துக்குவிரோதமாய் சர்க்காருக்கு காணிக்கைப்போடும்படியான ரூத்திரக்கூட்டம் 200 பேர்வரையில உள்ளேவிட்டு சேவிக்கப்பண்ணிவைசச சங்கதியைக்குறித்து நீர்விசாரணை செய்து வாங்கினவாக்குமூலங்கள்சகிதமாய் சிலவிவரங்கண்டு டிசம்பர்௴ 31௳ நீர்யெழுதிய 568-வது நெ. அர்ஜிவந்தது.

அதுகாரியத்துக்கு ஷை அர்ஜிவகையரு வாக்குமூலங்களை பார்வையிட்டதில் உம்முடைய அர்ஜியில்கண்டபடிக்கி அன்னியதினம் வெடியக்காலமே மானேஜர்களுடைய உத்திரவுக்கும் வழக்கத்துக்கும் விரோதமாய் அர்ச்சகம் நரசிங்கபட்டனும் ஆரிவிட்டான்கொல்ல ருமகிருஷ்ண ஞயக்கனும மனதறிந்து சர்க்காருக்கு வரும்படியான காணிக்கைப்பணத்தையும் மோசஞ்செய்து அபசாரத்துக்கு யெடமாய் திருப்புளிச்சி திருவாராதனமாகுறதற்குமுன் ஷை ரூத்திரக்கூட்டங்களை சன்னதிக்குள்ளேவிட்டு சேவிக்கப்பண்ணி வைச்சிருக்கிறதாய் தெரியவருகிறதேயல்லாமல் ஷை அர்ச்சகனும் கொல்லனும் ஷை செய்கைக்கி உள்ப்பட்டவர்களல்லபோல் யெழுதிவைத்திருக்கிறது யெதார்த்தமாய் யெவ்வளவும் காணப்படவில்லை.

ஷை ருமகிருஷ்ண ஞயக்கன் சொல்லுகிறபடி தான் அதில் சம்பந்தப்படாதவனாயிருந்தால் ஆரிவிட்டான் வாசலில் தானே யிருந்துகொண்டு அன்னேரத்தில் ஷை கூட்டங்களை உள்ளே போகவொட்டாமல் நிருத்தவேண்டியது அவனுடைய கடமையாயிருக்க அப்படிக்கிச்செய்யாமல் தன்னிடம்விட்டு சன்னதிக்குள்போய் கூட்டத்தை போகும்படி சொல்லவேண்டிய நிமித்தியம் இவனுக்கு யென்ன யிருக்கிறது.

இதின்பேரில் யோசிக்கும்போது ஷை அர்ச்சகனும் ஷை கொல்லனும் ஒன்றுசேர்ந்து ஷை கூட்டங்களிடத்தில் யேதோ சில பிறயோசனத்துக்கு இச்சித்து இப்படிக்கி அகாலத்தில் நடக்கும்படி செய்ததாகவும் கூடயிருந்த பரிசாரகன் அர்ச்சகனுடைய சொந்த மனுஷனையும் இந்த செய்கைக்கி ஷை கொல்லனும் அர்ச்சகனுமே முக்கியமான பாத்தியஸ்தர்களாயுமிருக்கிறதாக காணப்படுகிறதனாலே இப்பேர்ப்பட்ட அகாரியத்தை செய்த ஷை இருவரையும சுத்

தமாய் வேலையிலிருந்து பர்த்தர்ப்புசெய்து போடவேண்டியது அகத்தியமானதா யிருந்தாலும் இந்ததடவை மாப்புசெய்து ஷை நறசிங்கபட்டனை மூணு மாசத்துக்கும் கொல்ல ருபகிருஷ்ண னுயக்கனை ஆறு மாசத்துக்கும் வேலையிலிருந்து சஸ்பெண்டு செய்திருக்கிறது.

ஷை கெடுவாகிற வரையில் ஷை இருவரும் கோவில் வேலைகளில் பிரவேசிககாமல ஷை கொல்லன் வேலைக்கு தகுந்தவனுய் ஒருவனை பார்த்து வைதது வேலை பார்த்தவரும்படி திட்டம்செய்து அவன் பேர்கண்டு தெரிவிக்கிறதந்தவிர ஷை அர்சசகன் முறையை சர்க்கார் மனுஷியனுய் வைத்து அர்ச்சகாளில ஒருவனை பாாததவரும்படிக்கும் திட்டம் செய்யவும்.

பின்னும் பரிசாரகம் றெங்கசாமி யென்பவன் அர்ச்சகனுடைய சொந்த மனுஷியனையும் ஷை கூட்டங்களை சேவிக்கப்பண்ணி வைக்கவேண்டிய நிமித்தியமே கதவைத்திறந்து கூடயிருந்திருக்கையில் யெதார்த்தத்தை சொல்லாமல் படுத்துக்கொள்ளக்கூடாத ஜயவிஜயாள் வாசல் சன்னதிக்குள் படுததுக்கொண்டு தூங்கினதாய் சொன்ன தப்பிதத்துககாக ஷை பரிசாரகனுக்கு ரூ. 1 அபருதம் விதித்திருக்கிறது. அதை அவனிடத்தில் வசூல் செய்து ஆதாயம் வைதது அனுப்பவும்.

1861௵ ஜனவரியீ 16௳

(ஒப்பம) ஸ்ரீஉத்தமநம்பியங்காா. (ஒப்பம்) வீராசாமியய்யர். மானேஜர்கள்.

---

**16th August 1863—Trustees' order to Peshkar to prepare the list of Namams as directed by Collector.**

கெ. 167.

ஸ்ரீறங்கம் தேவஸ்தானம் யேட்பேஷக்கார் அப்பாசாமிய்யருக்கு.

யென்னவென்றால் ஷை தேவஸ்தானத்திலும் மதள்கோபுரம் முதலானயிடங்களிலும் இன்னின்னஜாகாவில் இவ்விதமான திருமண் வைக்கப்பட்டிருக்கிறதென்பதை கண்பார்த்து ஜாப்தாதயார்செய்து அனுபபும்படியாய் நாளதுயீ 7௳யுள்ள யேட் அஸிஸ்டாண்டு மேஜஸ்திரேட்டு துறையவர்கள் உத்திரவுசாதருயிருப்பதனாலே இந்த உத்திரவுகண்டவுடனே நீர் மிருசகணக்குப்பிள்ளை மேஸ்திரி இவர்களைகூடவைத்துக்கொண்டு கோபுரம் மண்டபம்மதள்களிலும் தங்கம், வெள்ளி, பித்தளை, தாம்பற பாத்திறங்களிலும் வாகனம், சிம்மாசனம், பல்லகருவகையறுவிலும் யெடுபிடிசாமான், தேர், திறை, அசுமானகிரிகட்டுவேலை முதலானதிலுமிருக்கிற திருமண்களைக்கண்பார்த்து விபறமாய் ஒரு ஜாப்த்தாதயார்செய்து ௨-தினத்துக்குள் அனுப்பிவிக்கவும். நாங்களும்வந்துபார்ப்போம். சரியாயிருக்கவேணும்.

1863௵ ஆகஸ்டுயீ 16௳.

(ஒப்பம்) தெலுங்கு கையெழுத்து. (ஒப்பம்) தே. பெரியசாமி முதலியார். மானேஜர்கள்.

---

**1st September 1863—Peshkar's list of Namams sent to the Trustees.**

ஸ்ரீறெங்கம் தேவஸ்தானத்திலும் அதைச்சேர்ந்த மண்டபம் மதிள் கோபுரம் பாத்திரம் வாகனம் பல்லாக்கு யெடுபிடிஜாமான் முதலானதுகளிலும் யிருக்கப்பட்ட திருமண்களுக்கு ஜாப்தா.

| விபறம். | நாமம் உருப்படி. |
|---|---|
| பெரியபெருமாள் வயிரதெங்கலை திருமண் ... ... ... | 1 |
| ஷை தங்கத்தகடு ஷை திருமண். ... ... ... ... | 1 |
| ஷை முத்து அங்கியில் முத்துனல் தெங்கலை திருமண்... ... ... | 1 |
| உஸ்த்தவர் பூபாலருயன் றெண்டிலும் தகடுகளின்பேரில் தெங்கலைத்திருமண்யிருக்கிறது. ஷை பெருமாள் செங்கோலில் தெங்கலை திருமண் ... ... | 1 |

திருமுத்துக்கொடையில் ஷை திருமண் ... ... ... ... 1

ஷை வெள்ளித்தடி 2-க்கு ஷை திருமண் ... ... ... ... 2

ஷை விமானத்தின்பேரில் சித்திரத்தினால்யெழுதியிருக்கிற பிரதிமைகளில் ஷை திருமண்கள் யிருந்துகொண்டுயிருக்கிறது.

தங்கத்தோளிக்கினியாளில் தெங்கலைத்திருமண் ... ... ... 1

திருவண்ணாழி பிரதக்ஷணம் செவரிலும் மண்டபம் நெத்திக்கண்ணிலும் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளில் அநேக தெங்கலைத்திருமண் யிருந்துகொண்டியிருக்கிறது. சேனைமுதலியார் பிரதக்ஷணம கெணர் கருங்கல்கயிபிடியில் தெங்கலைத்திருமண். ... ... ... ... ... 1

சந்தணம் அறைக்கிற கல்த்தொட்டியில் ஷை திருமண் ... ... 1

திருமஞ்சனம் அறைவாசலில்யிருக்கிற கல்த்தொட்டியில் ஷை திருமண் ... 1

துளுக்க நாச்சியார் அறைவாசலிலும் ஷை பக்கத்து செவர்களிலும் அர்ச்சுன மண்டபம் கிளிகட்டி மண்டபம் நெத்தி கண்ணிலும் ஷை பக்கதது செவரிலும் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளில் அநேகத் தெங்கலைத் திருமண்கள் யிருந்துகொண்டு யிருக்கிறது. தொண்டமான் மேட்டுக்கு யெதிரெ செவத்தில் மணவாள மாமுனி வகையறு சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமை 3 க்கு ஷை திருமண் ... 3

கிருஷ்ணன் கோவில் வாசலில் கல்லானை 2 க்கு ஷை திருமண் ... 2

செப்பறைவாசல் செவதில் கருங்கல்லில் ஷை திருமண் ... 1

திருவேங்கிட முடையான் வற்ண கிலுட்டு பிரதிமையில் ஷை திருமண் ... 1

வண்டியூர் சப்பறம் அடைப்பு படங்களில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளில் தெங்கலை திருமண் யிருந்துகொண்டிருக்கிறது.

பெரிய கோவில் நாச்சியார் கோவில் சக்கரத்தாழ்வார் கோவில் ஒறையூர் நாச்சியார் கோவில் யிந்த சன்னதிகளிலிருக்கிற தங்கம் வெள்ளி தாம்பறம் வெங்கலம் பித்தளை யிந்த பாத்திரங்களிலும் மேளங்களிலும் வெள்ளி வெங்கலம் தாமறம் வகையறு வந்த திட்டங்களிலும் தெறை அஸ்மானகிரிகளிலும் காப்பந்தம் வெங்கலப்பந்தம் தாசிரி பந்தங்களிலும் அநேகங்களில் ஷை தெங்கலை திருமண் யிருந்துக்கொண்டிருக்கிறது.

மகறதோரணத்தில் தெங்கலைத் திருமண் ... 2

கன்னாடி சுருட்டி 2 க்கு ஷை திருமண் ... 2

தங்கமிலாம் திருமஞ்சனம் வேதிகையில் ஷை திருமண் ... 3

ஷை வட்ட மணையில் ஷை திருமண் ... 2

வெங்கல பெரிய மணியில் ஷை திருமண் ... 1

வெள்ளி ஆனை வாகனம் ஷை கெருட வாகனம் ஷை யாளி வாகனம் யிதுகளின் நெத்தியில் தெங்கலை திருமண் யிருக்கிறதும் தவிற ஷை யானைவாகனம் செட்டபிறைபை இந்த பட்டரை பலகைகளிலும ஷை திருமண்கள் யிருந்துகொணடிருக்கிறது.

பாரிப்பல்லாக்குக் கொம்பிலும் ஷை பன்னுங்கத்திலும் ஆனைகளின் முகவெட்டிலும் ஷை திருமண் யிருந்துகொண்டிருக்கிறது.

திருமஞ்சனம் வெள்ளி கொடங்களிலும் ஷை தாமற கொடங்களிலும் தெங்கலைத் திருமண் யிருந்துகொண்டிருக்கிறது.

திருமால் வட்டங்களில் ஷை திருமண் யிருந்துகொண்டிருக்கிறது.

திருவாபறண பொட்டிகளில் சிலபொட்டியில் ஷை திருமண் யிருந்துகொண்டிருக்கிறது.

சேனைமுதலியார் பிரதக்ஷணத்தில் கருங்கல் நாலுகால்மண்டபத்தில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளில் ஷை திருமண்யிருந்துகொண்டிருக்கிறது.

ஷை பிரதக்ஷணத்தில் காவியினால் அநேக தெங்கலைத்திருமண் யிருந்துகொண்டிருக்கிறது.

வஸ்த்திரங்களில் சிலதில் ஷைதெங்கலைத் திருமண்யிருந்துகொண்டிருக்கிறது.

நாழ்விட்டவாசலில் யிருபக்கமிருக்கிற செயவிஜயாள் பிரதிமை 4-க்கு ஷை திருமண். ... ... ... ... ... ... 4

பெரியபோடு பணியாறபோடு சக்கிறவாரபோடு நெய்மடப்பிளி யிதுகளிலிருக்கிற கருங்கல்தொட்டிகளிலும் வெங்கல உருளிகளிலும் நெய்யெண்ணை அளக்கிற பாத்திரங்களிலும் மடப்பளி வெங்கலப்படியிலும ஷை திருமண் யிருந்துகொண்டிருக்கிறது.

பெறிய போடுவாசல் தூணில் ஷை திருமண் ... 2

பொன் துவஜ ஸ்தம்பம் கெருடன் நெத்தியில் ஷை திருமண் ... 1

ஊஞ்சல் மண்டபம் கல்லானை 2 க்கு ஷை திருமண் ... 2

திருப்பவுத்திர மோடு அயகிறீவர் அறை வாசலில் ஷை திருமண் ... 1

துறை மண்டபத்தில் தெசாவதாற பிரதிமைகளில் சிலதில் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

ஷை மண்டபம் கல்தூணில் ஷை திருமண் ... 1

மறசாமான் தொட்டியில் ஷை திருமண் ... 1

மொழுகு சேலையில் ஷை திருமண் ... 1

துவஜாரோகண மண்டபத்துக்கு முன் கம்பத்திலிருக்கிற அனுமார் நெத்தியில் ஷை திருமண் ... 1

ஷை மண்டபத்துக்கு யெதிரே யிருக்கிற சுவற்றில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பெறிய பெருமாள் வகையறு பிரதிமைகளில் ஷை தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

தங்கமிலாம் கெருட வாகனம், கல்பக விரக்ஷம், அனுமந்த வாகனம், சேஷ வாகனம், பெருமாள், நாச்சியார், ஊஞ்சல் யிதுகளில் அனேகம் தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

துறை மண்டப பிரதக்ஷணத்தில் காவியினால் தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

ஆறிவிட்ட வாசலில் முன்புரத்தில் காளா கட்டடத்துனாலும் முன்புரம் பின்புரத்தில் சித்திரத்துனாலும் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

கொட்டாரத்திலும் ஷை நெல்லு குதத்தப்பட்ட உலைக்கைகளிலும் தெங்கலை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

ஷை ருமசுவாமி சித்திர பிரதிமைகளில் ஷை திருமணிருக்கிறது.

முதலாழ்வார் கோவில், கோதண்டருமசுவாமி கோவில், பறமநாதன் கோவில், திருமழிசையாழ்வார் கோவில் இந்த கோவில் வாசலில் காளா கட்டடத்துனாலும் வரதராஜ பெருமான் கோவில் வாசலில் கருங்கல்லாலும் வாசுதேவ பெருமாள் வாசலில் சித்திரத்துனாலும் வெங்கடேசபெருமான்கோவில் வாசலில் சித்திரத்தினாலும் தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

நம்மாழ்வார் கோவில், திருக்கச்சநம்பி கோவில், வேணுகோபாலசுவாமி, தொண்டரடிப்படி இந்த கோவில்களிலும் வாசலில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளிலும் தெங்க்லை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

சந்திரபுஷ்கரணியில் கருங்கல்லில் ஷை தெங்கலை திருமண் ... 3

பறமபத வாசலுக்கு வடபுறமிருக்கிற நாலுகால் மண்டபம் தூணில் ஷை தெங்கலை திருமண் ... 1

பறமபத வாசல் கதவிலும் அதற்கு கிழ்புரம் நாலுகால் மண்டபத்திலும் திருமழிசையாழ்வார் கோவிலுக்கு நாலுகால் மண்டபத்திலும் அதற்கடுத்த வடபாமிருக்

கிறநாலுகால்மண்டபத்திலும் மண்டபநெத்திக்கண்ணிலும் சித்திரத்தினால்யெழுதியிருக்கிற அனேக பிரதிமைகளில் தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

ஸ்ரீபண்டாரவாசலில் காரைக்கட்டினால் தெங்கலை திருமண் ... ... 1

மணவெளிக்கி மேல்பாம் மதளில் காரைக்கட்டடத்தினால் ஷை பெரியதிருமண் ... 1

ஷை மதிளில் அனுமார்கெருடன் பிரதிமையில் ஷை திருமண் ... ... 2

கருடமண்டபம் தூண்களிலும் ஷை கருடன்நெத்தியிலும் ஷை திருமணிருந்துகொண்டியிருக்கிறது.

கொட்டாரம் பிரதக்ஷணத்தில் காவியினால் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

சக்காத்தாழவார் கோவில் வாசலிலும் பக்கத்தில் எழுதியிருக்கிற பிரதிமையிலும் சித்திரத்தினால் தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

சக்கரத்தாழ்வார் மூலவர் வெள்ளி தெங்கலை திருமண் ... 1

ஷை யோகா நரசிம்ம சுவாமி தெங்கலை ஷை திருமண் ... 1

தாமறசாளிக்கிறும சம்புடத்தில் ஷை திருமண் ... 1

ஷை பூபாலருயன் சிம்மாசனத்தில் தெங்கலை திருமண் ... 1

கெடாக்குழியில் காரை கட்டடத்தினால் ஷை திருமண் ... 1

சிலையினால் ஷை திருமண் ... 1

ஷை பிரதக்ஷணத்தில் காரையினால் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

நாச்சியார் கோவிலுக்கு தென்புரமிருக்கிற மண்டபங்களில் ஒரு நாலுகால் மண்டபம் நெத்திக்கண்ணில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற அனேக பிரதிமைகளில் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

நாச்சியார் வெள்ளி தோளிக்கினியாளில் ஷை திருமண் ... 1

சந்தண மண்டபத்திலிருக்கிற நாலுகால் மண்டப சப்பரத்தில் அனேக பிரதிமைகளில் ஷை திருமண்களிருக்கிறது.

நாச்சியார் கோவில் மாதிருவாசியில் ஷை திருமண் ... 1

ஷை சந்தண மண்டபத்திலிருக்கிற கல்லானை ஷை திருமண் ... 2

ஷை மண்டப தூணில் ஷை திருமண் ... 1

நாச்சியார் கோவில் பிரதக்ஷணத்தில் நெத்திக்கண்ணிலும் சுவரிலும் பங்குனி உத்திரமண்டபத்திலும் ஊஞ்சல் மண்டபத்திலும் திருவிண்ணாழி பிரதக்ஷணத்திலும் சித்திரத்தினால் எழுதியிருக்கிற அனேக பிரதிமைகளிலும் தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

நாச்சியார் விமானத்தில் சில பிரதிமைகளில் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

தேசிகர் கோவில் வாசலில் காரை கட்டடத்தினால் தெங்கலை திருமண் ... 1

மேட்டு அழகசிங்கர் கோவில் வாசலிலும் கர்த்தர் மண்டபத்திலும் சித்திரத்தினால் எழுதியிருக்கிற பிரதிமைகளில் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

வாசுதேவபெருமாள் கோவில் வாசலில் சித்திரத்தினால் தெங்கலை திருமண் ... 1

அதுக்கு மேல்புரமிருக்கிற அறை வாசலில் கருங்கல்லினால் ஷை திருமண் ... 1

உத்திரவீதிக்கிசமீபம் நாச்சியார் கோட்டைவாசலிலும் கூரத்தாழ்வார் கோட்டை வாசலிலும் சித்திரத்தினால் எழுதியிருக்கிற அனேக பிரதிமைகளில் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

ஆயிரக்கால் மண்டபத்தில் காவியினால் தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

சேஷாறுயர் மண்டபத்தில் நெத்திக்கண்ணிலும் தூண்களிலிருக்கிற பிரதிமைகளிலும் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

புள்ளலோகாசாரியார் சன்னதி வாசலில் காரை கட்டடத்தினாலும் இருபுரமிருக்கிற பிரதிமைகளில் சித்திரத்தினாலும் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

எம்பெருமானார் கோவில் வாசல் கதவிலும் தூணிலும் மய்யப்பத்தியில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளிலும ஷை திருமணிருக்கிறது.

கல்துஜ ஸ்தம்பத்திலும் ஷை வாகன மண்டபம் கல்தூணிலும் ஷை மண்டபத்தில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளிலும் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது..

ரெங்கவிலாசம் பெரிய நாலுகால் மண்டபம் நெத்திக்கண்ணிலும் திருவந்தி காப்பு நாலுகால் மண்டபம் நெதசிக்கண்ணிலும் தூணிலிருக்கிற பிரதிமைகளிலும் சித்திரத்தினால் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

மதுரகவியாழ்வார் கோவில வாசலில் கருங்கலலில் ஷை திருமண் ...

நெல் அளவு நாலுகால் மண்டபததில் நெத்திக்கண்ணில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற அநேக பொம்மைகளில் ஷை திருமண்களிருக்கிறது.

திருப்பாணாழ்வார் கோவில வாசலில் சித்திரத்தினால் ஷை திருமண் ...

தொண்டரடிப்பொடியாழ்வார் கோவில வாசலில் காரை கட்டடத்தினால் ஷை திருமண் ... ... ... ... ...

கூறத்தாழ்வார் கோவில் வாசலில் காரை கட்டடத்தினால் ஷை திருமண் ...

தேவஸ்தானம் கச்சேரி வாசலில் ஷை காரை கட்டடத்தினால் ஷை திருமண் ...

சூடிகொடுதத நாச்சியார் கோவில் வாசலில் காவியினால் ஷை திருமண் ...

கச்சேரி கொட்டடியிலும மண்டபம் நெதததிக்கண்ணிலும் ஆனையேத்த மண்டபம் நெத்திக்கண்ணிலும் சிததிரததினால் யெழுதியிருக்கிற அநேக பிரதிமைகளில ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

நாமக்கடை கோபுரத்தில் காவியினாலும் சக்கிலியன கோட்ட வாசலில் கருங்கல்லினாலும் சித்திரத்தினாலும் உத்திர வீதி வடபுரம் கோபுர வாசலில் சித்திரத்தினாலும் கட்ட கோபுரவாசலில் சித்திரத்தினாலும் பிரதிமைகள் வகையறுவில் ஷை தெங்கலை திருமணிருக்கிறது.

தைத்தேர் மண்டபததில் சித்திரத்தினால் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

கோரதம் சித்திரை தேர்முட்டி மண்டபத்திலும் காவியினால் ஷை திருமணிருக்கிறது.

தைததேர், சித்திரைத்தேர புஷ்பவிமானமென்கிற கோரதம் இதுகளில் தெங்கலை திருமணிருக்கிறதும் தவிர ஷை அச்சுவண்டி குறுகட்டைகளிலும் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

மணவாளமாமுனி சன்னதி வாசலில் காரை கட்டட ஷை திருமண் ...

கோறதமிருக்கிற வளவலா கட்டடத்தில காரை கட்டடத்தினால் ஷை திருமண் ...

தாமோதரன் கோபுர வாசலில் காரை கட்டடத்தினால் ஷை திருமண் ...

தலையாரி கோபுரவாசலில் நெத்திக்கண் வகையறுவிலிருக்கிற சித்திரங்களில் அநேக தெங்கலை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

சித்திரைவீதி மேல்கோபுர வாசலில் காரை கட்டடத்தினால் ஷை திருமண் ...

கிழ்வாசல் 16 கால் மண்டபத்தில் கருங்கல்லில் ஷை திருமண் ...

நாலு ருயகோபுரத்திலும் கருங்கல்லில் தெங்கலை திருமண்களிருக்கிறதும் தவிர தெற்கு ருயகோபுரம் தவிர மற்ற 3 ருயகோபுர வாசலிலும் சிங்கர் கோவிலுக்கு எதிருகயிருக்கிற கோட்ட வாசலிலும் அடையவளஞ்சான் மதள்களிலும் காரை கட்டடத்தினாலும் தெற்கு ருயகோபுர முனியப்பன்கோவில் வாசலில் சிததிரத்தினாலும் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

தெப்பக்குளத்தில் கருங்கல்லினால் ஷை திருமண் ... 2

ஆயனார் கோவில் வாசலில் காரை கட்டடத்தினால் ஷை திருமண் ... 1

திருமுக படித்துறை 16 கால் மண்டபத்தில் காரை கட்டடத்தினால் ஷை திருமண் 1

கருங்கல்லினால் ஷை திருமண் ... ... ... ... 1

சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளில் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

உரியடி உபயமண்டபத்தில் கருங்கல்லினால் ஷை திருமண் ... ... 2

காரைக்கட்டடத்தினால் ஷை திருமண் ... ... ... ... 1

சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளில் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

அசுவதீர்த்தகரை மண்டபத்தில் காரைக்கட்டடத்தினால் ஷை திருமண் ... 1

கருங்கல்லினால் ஷை திருமண் ... ... ... ... 1

நாகப்பிள்ளை ஒபயமண்டபத்தில் சித்திரத்தினால் ஷை திருமண் ... ... 2

யெல்லக்கரை ராமாஞ்சன் நாலுகால்மண்டபத்தில் தூணில் ஷை திருமண் ... 1

மொட்டக்கோபுரத்தில் கருங்கல்லினால் ஷை திருமண் ... ... 4

ஷை செணத்தில் ஷை திருமண். ... ... ... ... 1

யெல்லக்கரை மண்டபதில் கருங்கல்லினால் ஷை திருமண் ... ... 1

காரைக்கட்டடத்தினால் ஷை திருமண் ... ... ... ... 1

கோமுட்டிகள் ஒபயமண்டபத்தில் கருங்கல்லினால் ஷை திருமண் ... ... 2

காரைக்கட்டடத்தினால் ஷை திருமண் ... ... ... ... 1

ஷை 4 கால்மண்டபத்தில் கருங்கல்லினால் ஷை திருமண் ... ... 1

கலெக்ட்டர் ஒபயமண்டபத்தில் கருங்கல்லினால் ஷை திருமண் ... ... 1

அம்மாமண்டபத்தில் காரைக்கட்டடத்தினாலே ஷை திருமண் ... ... 2

கருங்கல்லினால் ஷை திருமண் ... ... ... ... 1

ஷை மண்டபத்துக்குப்போற மார்க்கத்திலிருக்கிற 4 கால்மண்டபத்தில் கருங்கல்லினால் ஷை திருமண் ... ... ... ... ... 1

வாணிய ஒபயமண்டபத்தில் காரைக்கட்டடத்தினால் ஷை ... ... 1

ஒண்டே ராமசாமி ஒபயமண்டபத்தில் ஷை திருமண்... ... ... 1

ராமகிஷ்ண னாயக்கர்மண்டபத்தில் ஷை திருமண் ... ... ... 1

விரகூழிமண்டபத்தில் ஷை ... ... ... ... 1

பழயபுளிவெட்டு மண்டபத்திலும் அதில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிரதிமைகளிலும் ஷை திருமண் யிருக்கிறது.

ஜிய்யபுரமண்டபத்திலும் அதில் சித்திரத்தினால் யெழுதியிருக்கிற பிறதிமைகளிலும் ஷை திருமண்களிருக்கிறது.

உத்தமர் கோவிலிலிருக்கிற ஸ்ரீறங்கனாதசுவாமி மண்டபத்தில் காரை கட்டடத்தினால் ஷை திருமண் ... ... ... ... ... 1

ஒறையூர் கோவிலும் மதள் மண்டபம் கோபுரம் இது வகையறாவிலும தெங்கலை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

சிங்கர் கோவிலிலிலும் ஷை கோட்டவாசல் மண்டபம் வகையறாவிலும் ஷை திருமணிருந்துகொண்டிருக்கிறது.

ஷை அழசிங்கர் கெத்தியில் வெள்ளியினால் ஷை திருமண் ... 1

வெளி சூடிக்கொடுத்த நாச்சியார் கோவிலின் வாசலில் சித்திரத்தினால் ஷை ... 1

சிங்கர்கோவில் விஜயதசமி மண்டபத்திலும் சுக்கிரவார தோட்டத்திலிருக்கிற மண்டபத்திலும் ஷை திருமண்களிருந்துகொண்டிருக்கிறது.

ஷரு.

தேர்வண்டியூர் சப்பறம் கடுதாசி ஒட்டுவேலைகளிலும் கொட்டகை திருநாள் நாக்கம் சபைபொம்மை திருவாசி வகையறுவிலும் குருத்தோலை சப்பரம் தடுக்கு திருவாசிகளிலும் புஷபசப்பரங்களிலும் அரும்பு பல்லாக்கு ஆளும்பல்லாக்கு யிதுகளிலும் ஆழ்வார் ஆச்சாரியார் திருநக்ஷத்திர சப்பிரங்களிலும் அந்தந்த உத்ஸவத்தின்போது தெங்கலை திருமண்கள் வைத்து வருகிற வழக்கமாயும் ஷை கட்டுவேலைகளில் சித்திறத்திலுல் யெழுதியிருக்கிற பிரதிமைகளிலும் ஷை திருமண்கள் வைதது வருகிற வழக்கமாயுமிருக்கிறது.

1863 ௵ செப்டம்பர் ௴ 1 ௳

(ஒப்பம்) ஆகிருசா. (ஒப்பம்) மிரூக கணக்கு சாமியாபிள்ளை. (ஒப்பம்) பேட் பேஷ்க்கார்.

---

**21st July 1864—High Court Proceedings in Nadhamuni Kovil** *stone* **Vadagalai namam case.**

## IN THE HIGH COURT OF JUDICATURE AT MADRAS.

Thursday the 21st July 1864.

Present.—The Honorable Mr. Justice Frere
and The Honorable Mr. Justice Holloway.

Criminal Petition No. 20 of 1864.

Nadamuni Ranga Iyengar ... ...Petitioner

Sudarsana Bhatter *alias* Sri Parasara Bhatter, Counter petitioner.

Application under S. 404 of the Code of Criminal Procedure for revision of the sentence of the Head Assistant Magistrate of Trichinopoly in Case No. 89 of 1863 on his file.

This application coming on for final hearing, the Court, upon perusing the application and the record sent up by the Magistrate, and upon hearing the arguments of W. Stokes Esquire, Counsel, and T. Srinivasa Chari, Vakil for petitioner, and of Alexander M. Ritchie Esquire and S. Tirumalachari, Vakils for counter petitioner, delivered the following judgment:—

*Judgment.*—This is an application to the Court to quash a sentence passed by the Head Assistant Magistrate of Trichinopoly and confirmed by the Sessions Judge. The ground was that the sentence of fine of Rs 1000, passed under S. 188 of the Penal Code for setting up a Vadagalai Mark in the important pagoda of Srirangam contrary to the Magisterial order, was contrary to law, because there was literally *no evidence* that the prisoner had committed the offence.

2. As the calender of the Head Assistant Magistrate set out no evidence, whatever, that the act had been done by the prisoner we considered it necessary to call for a translation of the record which has now been laid before us

3. To avoid all misapprehension, we think it necessary to state that the act, if committed, would in our opinion, clearly fall within the provisions of S. 188. The order of the Magistrate was merely a reiteration of orders which have been in force for a period of many years forbidding the setting up of Vadagalai Marks in this pagoda. We are quite unable to assent to the arguments of the appellant's Counsel that the setting up of such a mark is only a reasonable exercise of liberty. The act, in the place in which it was done, precisely resembles the act of a zealous protestant who should be rash or wicked enough to scrawl "no popery" in a Roman Catholic church, situate in the midst of the excitable and not highly instructed population of an Irish country. There could be no question of the tendency of such an act to create a riot or affray. Even therefore if such a question would be open to us, we should come unhesitatingly to the conclusion that the tendency is clearly made out.

4. We should also not think the punishment at all excessive for the commission of so wanton an act.

5. We make these observations to prevent the slightest possibility of the appellant imagining that we either consider the act done in violation of the Magistrate's order legal or that the result of this application warrants the sect to which the appellant belongs in setting up such a mark.

6. We have, however, read the proceedings in this case with great surprise and dissatisfaction. The person convicted has actually not been tried at all. No evidence whatever has been taken that he either committed this act or caused others to commit it. All the evidence consists of the opinion of the Head Assistant Magistrate upon inspecting the mark. He states that it is impossible for him to decide upon inspection and he then determines the point by reference to evidence taken in another case, that it was a recent mark, that any evidence for the defence is unnecessary, and that as their factions are very bitter, a severe punishment is necessary. It is almost incredible that any Magistrate, how inexperienced soever, could thus convict and punish a man without any trial at all, that he should consider the mere fact of a certain act having been done sufficient without a scintilla of evidence to fix its commission upon a particular person, and that when about to inflict an exemplary punishment, he should consider the hearing of the prisoner's evidence needless.

7. The matter however assumes a much more serious aspect when a sentence so passed is found to have been confirmed by a Sessions Judge; who has been many years upon the bench. It would naturally be supposed that so mere a mockery of justice would have at once attracted his attention, that he would have passed a well deserved censure upon such proceedings, and have remedied the illegality committed. He has done none of these things, but by sanctioning proceedings of the character described, has either wholly misconceived or entirely neglected the important duties devolving upon him. As the sentence in a case which has never been tried is wholly illegal, it is unnecessary precisely to define the want of evidence which will render it necessary as a question of law, to quash a sentence against which there is no appeal upon the fact.

8. It is accordingly ordered that the decision of the Head Assistant Magistrate be, and the same hereby is, reversed and that the fine, if levied, be returned to the defendant.

(By the Court) (Signed) P. P. HUTHCINS,
*Ag. Registrar, Appellate Side.*

---

**13th November 1866—Original Decree in Dhanvanthiri Mode suit.**

DECREE.

**Original Suit No. 1 of 1864 on Sudar Amins side.**

## In the Civil Court of Trichinopoly.

Present:—A. E. R. McDONELL Esquire, *Civil Judge.*

1. Srinivasa Ragaviengar.
2. Krishnasami Iyengar.
3. Sesha Iyengar.

} Plaintiffs

Vakils Saptharishi Sastry, Vythilingier & High Court Vakil, T. Srinivasachari.

Parasara Sudarsana Bhatter. Defendant.

Vakil Srinivasa Iyer.

The Plaintiffs sue for the establishing their title to a certain pagoda and to prevent the Defendant from all interference with their enjoyment of the same, and further to recover from him, Rupees three hundred, being charges for expenses incurred by them (Plaintiffs) in consequence of the Defendant's interference.

2. The Court dismises the Plaintiffs' claim with all costs.

| To be paid to Defendant by Plaintiffs. | | To be borne by Plaintiffs. | |
|---|---|---|---|
| Value of stamp papers used for statements &c. | 2—0—0 | Value of stamp papers used for plaint &c | 52—0—0 |
| Peon's Batta.... ... | 1—4—0 | Peon's Batta... ... | 3—0—0 |
| Vakils' fee ... ... | 70—0—0 | Vakils fee ... ... | 70—0—0 |
| | 73—4—0 | | 125—0—0 |

Given under my hand and the seal of the Civil Court of Trichinopoly, this 13th November 1866. The period for preferring an appeal is 90 days from this date.

(Signed) **A. E. R. McDONELL,**
*Civil Judge.*

---

## 16th May 1864--Peria Appu Bhatter fined by Trustees for taking God with 2 instead of 3 Archakas.

நெ. 200.

ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் பேட் பேஷ்க்கார் ஸ்ரீனிவாஸ ரா||ருக்கு.

நாளது மீ 12௳ தேதி யெழுதிய 189 நெ. அர்ஜியையும் அத்துடன் வந்த அர்ச்சக பெரிய அப்புபட்டர் குமாரன் வெங்கிடாசல பட்டன் வாக்கு மூலத்தையும் பார்வையிட்டதில் சர்க்கார் உத்திரவுகளுக்கு கோவில் யேர்ப்பாட்டுக்கும் வழக்கத்துக்கும் விரோதமாய் சித்திரைமீ 19௳ சித்திரை உத்சவம் நாலாந்திருநாள் கோமட்டி மண்டபத்தில் அர்ச்சகாள் 3 பேர் இருந்து பெருமாளை யேளப்பண்ணாமல் பெருமாள் திருமேனி விரயத்தில் நிர்ப்பயமாய் ஷை வெங்கிடாசலப்பட்டன் அவன் தம்பி கிருஷ்ணபட்டனைமட்டும் சேர்த்துக்கொண்டு இரண்டு பேராய் யேளப்பண்ணியிருப்பதாக தெரியவருகிற தப்பிதத்துக்காக ரூ. 10 அபராதம் விதித்திருக்கிறது. அதை உடனே அன்னியதினம் முறைக்கார பெரிய அப்பு பட்டரிடம் வசூல் செய்து ஆதாயம் வைத்து தெரியப்படுத்துகிறதும் தவிர இனி உத்திரவுக்கு விரோதமாய் நடக்காமல் யெப்போவும் அர்ச்சகாள் 3 பேருக்குக் குறையாமல் இருந்து பெருமாளை யேளப்பண்ணி வரும்படியாய் திட்டப்படுத்தவும். அபராதம் செலுத்த ஆட்சேபித்தால் வசூலாகிறவரையில் ஆரிவிட்ட வாசலுக்கு வெளியில் நிருத்திப்போடவும்.

1864௵ மேமீ 16௳

(ஒப்பம்) ஸ்ரீஉத்தமநம்பிய்யங்கார். (ஒப்பம்) தே. பெரியசாமி முதலியார்.
மானேஜர்கள்.

---

## 26th March 1865—Trustees' order to Peshkar to recoup from Archakas for loss of jewels.

நெ. 97.

ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் பேட் பேஷ்க்கார் ஸ்ரீனிவாஸ ரா||ருக்கு.

அர்ச்சகாள் வசம் ஒப்புவிக்கப்பட்டு பெரிய பெருமாளுக்கு சாத்தியிருந்த மகாலட்சுமி பதக்கத்தின் சரடு ஒடிந்து ஜீரணமாயிருந்ததை தாஸ்து செய்ய நிருத்து பார்த்ததில பதக்கமுள்பட கணக்குப்படி யிருக்கவேண்டிய விராகனிடை $506\frac{1}{2}$ க்கு இருப்பு இருக்கிறது பதக்கம் விராகனிடை 103 சரடு விராகனிடை $348\frac{1}{2}$ ஆக விராகனிடை $451\frac{1}{2}$ போக விராகனிடை 55 கம்மி நேரிட்டிருக்கிறதாய் சில விபரத்துடன் அர்ச்சகாள் வாக்கு மூலம் சகிதமாய் சென்ற 64௵ டிசம்பர்மீ 27௳ தேதி யெழுதிய 500 நெ. அர்ஜி வந்தது.

அது காரியத்துக்கு ஷை சரடு யெப்போ ஜீரணப்பட்டு ஒடியும்படியிருந்ததோ அந்த காலத்தில்தானே அதை கைவசமாய் வைத்துக்கொண்டிருந்த அர்ச்சகாள் சர்க்காரில் ஒப்புவி

